ஸ்ரீராமஜயம்.

# திருவடிதாசர்

அருளிச்செய்த

# கஜேந்திரமோட்சம்

மூலபாடம்.

Acc. NO. 2847



௩-ம் பதிப்பு.




இஃது

சென்னபட்டணம்:

ஊ. புஷ்பரதசெட்டியாரால்

தமது.

கலாரத்நாகரம் என்னும் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1890.


நன்றாக.



குருவாழ்க.


குருவேதுணை.

# கஜேந்திரமோக்ஷம்.

## காப்பு.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பார்புகழ்கஜேந்திரன்றன்பரகதிக்கதையையன்பால்
ஏர்தமிழ்கவியாற்சொல்லவென்னுளத்திருந்துகாப்பாய்
வார்திரைகுதித்துவாளைவயற்றலைநாற்றிற்பாயுஞ்
சீர்மிகுகுருகூர்மேவிச்சிந்துரத்தமர்ந்ததேவே. (௧)

பூதன்பேய்பொய்கைமாறன்புகழ்மண்டங்குடிமன்மங்கை
நாதன்றென்புதுவைவந்தநன்முனிகோதைதொண்டர்
பாததூண்மழிசைமன்னன்பாணன்கோளூர்மன்றாள்கள்
தோதகப்பிறப்பைநீக்கத்துணையெனக்கொள்ளுவேமால். (௨)

மங்குறோய்தெங்கின்பாளைவாவியிற்றோற்றக்கண்டே
அங்குளவாளைமீன்பாய்ந்தச்சங்கொண்டட்கும்பூதூர்த்
தங்குமாவெதிராசன்றன்றாளிணைசிரமேற்கொண்டு
கங்குலெல்லினுமன்னானைக்காதலோடகத்திற்கொள்வாம். (௩)

கனங்குழலசியன்முல்லைபல்லெனக்கருதுமாதர்
தனமனையெனுமூவாசைதடிந்தமாவெதிராசன்றன்
வனபதமடைந்தநான்கோடெழுபதுமகுடச்சிங்கா
தனக்குருராயர்தாள்கள்சந்ததமிறைஞ்சிசிற்பாம். (௪)

சாதகக்கடல்கடக்கச்சதாதிருவாய்மொழிக்கு
மேதகுமுப்பத்தாறுயிரப்படியிடைந்தூய
மாதவத்தடியவர்தமனவாளமுனிபின்சேர்த்தி
ஈதகவமுத்தியேத்திநன்றுதமவனற்றுளே. (௬)

---

## நூல்.

### அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

செகதலத்தரசனுக்செறிபரிச்சித்தராசன்
சுகர்பதம்போற்றிசெய்துதம்பியைப்பொருதுநின்ற
மகபலமுதலிதன்னைவதைத்தவாரணத்தையன்று
ககபதியூர்திகாத்தகாரணஞ்சொல்லுமென்றான். (௧)

சொல்லிலேயரியைச்சொல்லுஞ்சொல்லதுசொல்லதாகும்
அல்லெனும்வினையைநீக்குமறிவுமேலறிவதாகும்
வல்லதாம்பேரின்பத்தைமருவியுண்டிருக்கலாகும்
நல்லதுகேட்கலுற்றாய்பாதனேகேளுமென்றே. (௨)

மாயவனருளினாலேவகுத்திடுமூலகிற்பியாதி
வியாதமாமுனிமுன்னாளில்விளம்பியகதையைப்பாண்டு
சேயெனுந்தருமனுக்குச்செப்புநாரதர்சொற்கேட்டு
நேயமாயானுஞ்சொல்வேனெறியுடனிருந்துகேண்மோ. (௩)

சேருமலைசமட்பித்திடரோன்றண்டதனின்மீது
மேருவண்டத்துமூன்றுமின்னியசிகரமுண்டு
ஆரமுமகணிதேவர்தொகையிருபிரமாங்காதம்
காரணமாயிருக்குஞ்சிலையெலாங்கனகநேராம். (௪)

அந்நிலைமுனிவர்தேவருந்தவம்புரிந்துநெஞ்சில்
உன்னியபொருளைமாயோனுகந்தளித்திடவேகொள்வர்
இன்னரர்கருடர்போதிக்கேசரர்முதலாய்வாழ்வர்
பின்னுமவ்வனத்திலுற்றபெருமையுமுரைக்கலுற்றும். (௫).

மாதளைமாவிலங்கமராமரம்பாரிசாதம்
சூதநாரத்தைவில்வஞ்சுந்தரக்கமுகிலந்தை
தாதுசேர்தேவதாரஞ்சந்தனங்கதலிகொன்றை
சீதளமகிழ்செந்தாழைசெம்மரஞ்சம்பசோகம். (சு)

கன்னலாலத்திபாலைகாஞ்சிரமிலுப்பைவேம்பு
புன்னைசாம்பிராணிவேங்கைபுன்குமந்தாழைமூங்கில்
வன்னிசண்பகம்லவங்கமரகதம்வயிரமாச்சா
தென்னுருத்திராக்கநெல்லிதேக்குப்பாதிரிபலாவும். (எ)

முருக்கெலுமிச்சையிஞ்சிமுந்திரிதமர்த்தம்வேலும்
நெருக்கியவளர்கடாரைநேரிளவஞ்சிதாலம்
செருக்கியகடுக்காய்தான்றிசெறிபலத்தருவுமன்றி
மருக்கொழுந்துவளமுல்லைமல்லிகைவகையநேகம். (அ)

அவ்வனந்தன்னிலேயொட்டகம்பரியாளிசிங்கம்
கவ்வியவேங்கையேனங்கரடிமான்கலைகடம்பை
எவ்விடம்பார்க்கிலுங்காரொருமையும்பசுவுஞ்சேவும்
ஒவ்வியகவிகள்மற்றுமுளைபலமிருகமுண்டு. (கு)

சக்கரவாகப்புள்ளுஞ்சாதகஞ்சிகிசகோரங்
குக்குடந்தாராவன்னங்கோகிலங்கிள்ளைகாகங்
கொக்குடன்கல்விநாரைகூளிபேராந்தைகூகை
தக்கவல்லூறுடன்ராசாளிபல்பறவைபோகம். (க0)

பலபலமிருகவார்ப்பும்பக்ஷிகளார்ப்புஞ்சாயுஞ்
சலதியினார்ப்புந்தாருதருசருகார்ப்புஞ்சாலக்
கலைதெரிமுனிவர்தேவர்கருடர்கந்தருவரார்ப்பும்
நிலையதாமதன்குணத்தைநிகழ்த்துதற்கருமையாமால். (கக)

தாவியககனவீதிதழைத்தவண்டருக்கள்மாறுப்
பூவிளம்பிஞ்சுங்காயும்பொழிசுவைக்கனிகளோடும்
வாவிகள்வீசும்வாசவாரிசங்குவளையாம்பல்
மேவியேயிருக்குமந்தவெற்பினைச்சூழ்திக்கெல்லாம். (கஉ)

பூரணமாகசிந்தம்பொழிமதவனத்திலுள்ள
வாரணக்குழுவிஞ்சிமதத்துமற்போர்செய்காலை
தாரணிநடுங்குஞ்சிங்கஞ்சார்த்தூலஞ்சர்ப்பமிக்தக்
காரணமேதோவென்றுகலக்கியேவெருவியோடும். (௧௩)

பன்றியைத்துரத்திப்பற்றிப்பாரினிற்மோதஞ்சின்ன
அன்றிலைப்பிடித்துவிசமரங்களையடித்துச்சாடும்
குன்றினைக்குலுங்கத்தாக்குங்குரங்கினைக்குகையிற்சேர்க்கும்
மின்சிறைப்பறவைவாளமேவியேபறக்கச்செய்யும். (௧௪)

பாரிபசிங்கம்யாளியயந்துதம்மலையிலேறும்
கிரிகளும்பெம்புபுலிகளென்றுதம்வளையிற்செல்லும்
வீரியபுலிபல்லூகம்வெருண்டுதம்முழையிலேறும்
கீரிவின்மகிடமூழ்கிநீக்கியேதிரியுமன்றே. (௧௫)

கன்னலைமுறித்துமெல்லுங்கதலியின்கனியைத்தின்னும்
செந்நெலைப்புசிக்குந்துன்னுஞ்செறிவிளாங்கனியைக்கொள்ளும்
அந்நிலையானைக்கெல்லாமரசனுமிருக்குமானை
தன்னினம்பிரிந்துகோடிகரிணியோடிருந்ததன்றே. (௧௬)

அல்லலோர்காளிலேயுமறிந்திடாவத்தர்க்குத்
தொல்லைநாட்செய்ததீமைதொடர்ந்தநாளிற்காளாகி
எல்லையாம்வனத்தைவிட்டுவெள்ளிலாக்கரிணியோடு
மெல்லுகந்துணைவுதேடிமேய்ந்ததானெடியதூரம். (௧௭)

தாமரையல்லிசெய்ததன்புனல்கண்டுதோய
காமலர்கறையுள்வண்டிருதகிதத்திருலும்
தேமருபறவைபேசுந்தொனியினின்முழக்கத்தாலும்
காமன்றனம்பிருதய்காதலேமிகவுமாகி. (௧௮)

வாலெடுத்துபரவிசிவாலிலேதுதிக்கைநீட்டி
மாலெடுத்தடர்ந்துவிட்டிவதனமேல்வதனஞ்சேர்த்துக்
காலொடுகாலைப்பின்னிக்கரிணிகண்மீதிலன்பாய்
மூலத்தைமொழிந்துசெய்யும்லீலையைமொழியலாமோ. (௧௯)

பங்கயப்பொய்கைதன்னைப்பார்த்துடன்பரிவாய்க்கோடி
அங்கயக்கரிணியோடவ்வாரியினிழிந்துதங்கள்
அங்கமுங்குளிரத்தோய்ந்தாய்கருந்தியேதாகந்தீர்ந்து
பொங்கமாய்த்தும்பிராஜன்புதுமலர்கொய்யுங்காலை. (௨0)

முன்பொருசாபத்தாற்கந்தருவனுமுதலையாகித்
தன்பெரும்பலத்தினாலேசலத்திடையிருந்துதந்தி
பின்வருங்காலைநாடிப்பிடித்திடவுதைக்கநொந்து
வன்பெருங்கரவுமீண்டும்வந்துமுன்றாளைக்கிட்டி. (௨௧)

பற்றியேயிழுக்குமந்தப்பாரியமுதலையின்வல்
நெற்றியைப்பிளப்பனென்றுநீண்டதன்றுதிக்கையாலே
மொத்திடக்கரவுநீரின்மூழ்கியேமேல்வந்தெய்தி
வெற்றிதோல்வியுமிலாமல்வெகுண்டுபோர்செய்யுங்காலை. (௨௨)

கூடியேவந்துநின்றகரிணிகள்கோடிதாமும்
வாடியேவெருவிச்சாலமயங்கியேகரையிலேறி
நாடியேநோக்கியின்றுநாதனுக்கிந்தப்பாடு
தேடியேவந்தானம்மாற்செய்வதென்னென்றுகூறி. (௨௩)

ஆளனைப்பிரிந்துசெல்லவத்தியின்குழாங்கடங்கள்
தாளெழாதாகநின்றுதயங்கியேயலறுமந்த
வேளையிற்பற்றிநின்றகரவினைவீசியின்னே
மீளுவனென்றுதந்திமிகவலிந்திழுக்குங்காலை. (௨௪)

கரையின்வாயீர்க்குந்தந்திகரவுநீர்நடுவினீர்க்கும்
வரையுடன்வரையெதிர்ந்துமற்பொருவதுபோல்வாயில்
நுரைபெறவொன்றுக்கொன்றுநோக்கியேதாக்கியங்கம்
உரைபடத்தசைகள்சிந்தவுதிரமும்பெருகவன்றே. (௨௫)

நாற்பெருந்திசையுமண்ணுநடுங்கிடநாகராசன்
ஆர்ப்பரித்துறுதிகொண்டங்கப்பினைக்கிழியமோதிக்
கார்ப்பெருங்குன்றுபோலக்கடித்திடுங்கரவைக்கண்டு
சூற்பெரும்பிண்டம்விழப்புடைத்ததுதுதிக்கையாலே. (௨௬)

அடியதுபட்டுமூர்ச்சையாகியேதெளிவுகொண்டு
கொடிதெனுங்கரவுமிதிக்கோபமாய்த்தந்தியின்வால்
அடிபெறுமூலந்தன்னிலழுந்தவேகத்தாற்கேறி
நெடிதெனுமூச்செறிந்துநீரெலாமுலவுமன்றே. (௨௭)

விழுமெழுந்திருக்குஞ்சிறுமேனுமாய்க்கிழமாகும்
சுழிபடநீரையெல்லாந்துதிக்கையாற்குழப்புமச்சக்
குழுவுடன்கடகஞ்சிப்பிகூர்மமண்கேமெல்லாம்
பழுதிதுவேதோவென்றுபயந்துபாதாளஞ்சேரும். (௨௮)

இப்படிக்கொன்றோடொன்றிங்கிரவிதுபகலென்னாமல்
அப்பிலாயிரமாண்டாட்சியாப்புக்கொண்டிருந்ததென்று
தப்பிலாமுனிவன்சொல்லத்தரணிபன்கரங்கள்கூப்பி
எப்படியிருந்ததம்பலெனவவன்சொல்லலுற்றான். (௨௯)

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தந்தியுந்நெடோட்கராவுடன்றுக்கியேசமர்செய்துளம்
சோர்ந்துவாடியேநாலுதிக்கையுநோக்கியேமனமேக்கமாய்
முந்துநாளுறைவெற்பிடத்தலைதபுமுறைமைசெய்திடு முறைமையு
எந்தநாளிலேகாணுவேனினியென்றுபின்னுமியம்புமால். [ம்

தாதுலாவும்வள்ளுவிசேர்வனந்தன்னிலேதமர்குழவே
நீதிமாமலநேகானவனசெல்வமாகவிருந்தநாம்
ஏதுகாரணமோதெரிந்திலமிங்குவந்துதிகைப்பதிப்
போதுநாமினிசெய்வதேதெனவெண்ணிநின்றுபுலம்புமால். ()

சுற்றமுந்துணையானபேரையுஞ்சுந்தரத்தொளிர்தோகைமார்
பத்துலக்ஷமதானபேர்களைப்பாகனைப்பதியைப்பிரிந்
திந்தலத்திடைவந்தகப்படவென்றயன்சிரமெழுதிடப்
பெற்றபேறிதுதானோவென்றதுபின்னுநின்றுபுலம்புமால். (௩௨)

சுரும்புதேனையருந்தியேசுரம்பாடியாடிடுஞ்சோலையில்
கரும்புசெந்நெல்கதிர்த்துறுங்கதலிப்பலாகமுகாய்கனி
அரும்புபூந்தளிர்முதலயாவுமருந்தியக்குறையாமலும்
கருங்கராவிடவாயகப்படவந்தகாரணமேதெனும். (௩௩)

மதத்துவீரியகுஞ்சரக்குழுதன்னொடுந்தவனத்திடை
எதிர்த்தகேசரிபன்றிகாயெருமைக்கடாபுலியாவையும் [யெவ்
அதிர்த்துமுற்றவளைத்துமொய்த்துனடக்குமென்னிடவான்மை
விதத்திலும்மிதைவெல்லலின்றரிதென்றுநின்றுவிளம்புமால். ()

கன்றிக்கண்ணீருதிர்த்திடும்பலகாரியங்கணினைத்திடுங்
குன்றுபோலவிருந்தமேனியுங்குன்றிடுமிகவுங்குறைந்
தின்றுகாமினிச்செய்வதென்னெனவேங்கியேமனமெலிவினல்
நின்றிடுந்தலைநாளிலேசெய்தநிந்தையென்றுநினைந்திடும். (௩௫)

நூறுபத்துவருடங்கள்போர்செய்துநொந்துவாடியகுஞ்சரம்
பூருவத்துளஞானம்வந்துபொருந்தியேவினைபோக்கிட
வேறுதிக்கிலையென்றறிந்ததுவேண்டியேசருவேசனைக்
கூறியேநெறியைக்கொண்டேகுணத்தினலேதுதித்திடும். ()

ஆதியாகியுநடுவுமாகியுமந்தமாகியநாதியாய்ச்
சோதியாகியுஞ்சொருபமாகியுஞ்சுருதியோதிடுபொருளுமாய்
நீதியாகியுநெறியுமாகியுநேசர்தம்மிடைநிலையுமாய்
நாதனாகியும்வீறுமீசனைநம்பினேனெனமுறையிடும். (௩௭)

மண்ணுமாகியும்விண்ணுமாகியும்வாயுதேயுவம்போதயாய்க்
கண்ணுமாகியுமுயிருமாகியுங்காயமாகியுமாயையாய்ப்
பெண்ணுமாகியுமாணுமாகியும்பேடியாகியும்பெருமையாய்
எண்ணுணுவடிவாகிநின்றிடுமீசனேயபயம்மெனும். (௩அ)

உருவமாகியுமருவமாகியுமொருமையாகியுமிருமையாய்
மருவுமாகியுமலருமாகியுமாதவத்தவர்மதுரமாய்ப்
பெரிதுமாகியுஞ்சிறிதுமாகியும்பேதமாகியபேதமாய்க்
குருவுமாயுபதேசமாகியகோவேநீகதியென்றிடும். (௩௯)

மனமுமாகியுமொழியுமாகியுமருவியேவனரூபமாய்
இனனுமாகியுஞ்சசியுமாகியுமெறிதிரைக்கடன்மேருவாய்த்
தனயனுகியுந்தந்தையாகியுந்தாயுமாகியுந்தமருமாய்
அனையுமாகியபொருளெனும்பரமானவாவபயம்மெனும். (௪௦)

அறிவுமாகியுமறதியாகியுமடியவர்க்கெளிதாகியும்
குறியுமாகியுங்குணமுமாகியுங்குலமுமாகியுந்தொழிலுமைம்
பொறியுமாகியும்புலனுமாகியும்புந்தியாகியும்பின்றொடர்
நிர்குணநிபுணனாகாரணதேவனேயபயம்மெனும். (சக)

அரனுமாகியுமரியுமாகியுமயனுமாகியுமனாதமாய்
ஈரருமாகியுஞ்சாருமாகியுநாதமாப்பிரணவமுமாய்ச்
சரமுமாயிடைபின்கலைநடுச்சாக்ரசொப்பனசுழுத்தியாய்த்
துரியமாகியதீதமாகியசொருபனேயபயம்மெனும். (சஉ)

வேறு.

உலகமீ ரேழு நிலைவிடையளித்த வொருவனீ மூவுரு வாகிப், பலபல விதமா யிருவகை யுயிர்ப்பின் பரவியுட் புறமுமாய்நிறைந்த, நிலைமைநீ யறிவை நின்னையாரறிவர் நீவருத் திடுமிருமையினும், அலைபடப் படேன்யா னஞ்சலென் றினியெற் கபயமீந் தென்னையா ளெனுமால். (சங)

காயமே நிலையென் றுணவுந் தழுந்தங் கருத்தையுந் திருத்திட வறியேன், மாயமாம் பாசப் பவக்கடல் கடந்துன் மதுரவாரிதியுள வறியேன், வியவும் பிறவும் வருத்திடுங் கருமம் வினைலே செய்துசெய் தலுத்தேன், ஆயுமா றறியே னஞ்சலென் றினியுன் னபயமீந்தென்னையா ளெனுமால். (சச)

தேனிலீ ரிப்போல் விலைப்படு கயல்போற் சிறுவர்கைப் பறவைசிக் குதல்போல், வேலிலாப் படைபோன் மழையிலாப் பயிர்போற் கொம்பிலாப் படர்கொடி யதுபோல், கானகத் திருளின் முடவனூர் வதுபோற் கலங்கியே காரிடை மெலிந்தேன், குணமின் னடிமைக் கடிமையாய் நீவந் தபயமீந் தென்னையா ளெனுமால். (சரு)

இருவினைக் கீடா யெடுத்தவிவ் வுடம்பை யென்னதென் றினிதென விருந்து, பொருளிடத் தயரி னனலினி லிளைபோற் போலிமன முருகிடப் பொறேனும், உருவினுக் குயிரா யுயிருக்

குணர்வா யொளியினுக் கொளியதா யொளிரும், அறிவினுக் கறிவே யஞ்சலென் றினியுன் னபயமீந் தென்னையா ளெனு மால். (சகூ)

உனையலா தொளிரு முலகிலை நீயு முலகிலா தொளிர்வது மில்லை, நினைவிலே கனவுங் கனவிலே நினைவு நேரிடு நிலைமை யாய் நின்றாய், கனவினைக் கரவின் பிணிப்பினின் றடியேன் கனாயிலே நிடத்தயை யருள்வாய், அனைவருக் கரசே கரு ணைவா ரிதியே யண்ணலே யென்னையா ளெனுமால். (சஎ)

பொறிபுலன் விடயத் தமுந்திமெய்ம் மறந்து புலைகொலை களவினுக் கிசைந்து, நெறிமறை யொழுகும் பயன்றுறந் திழிவா நீசர்தந் நேயமே நிலையாய்க், குறியுறு நினைவு கொண்டிரு வினை யின் குரம்பையி னடலையி னுழன்றேன், அறிவதை யறியே னஞ்சலென் றினியுன் னபயமீந் தென்னையா ளெனுமால். (சஅ)

பூதமைந் துதித்துப் பொறிபுலன் கரணம் பொருந்துமூன் றவத்தையுங் கடந்து, நாதமீ தாகுந் துரியமேற் றுரிய நடன னே நின்றனை நாவில், ஓதுவார் பணிவார்க் குவந்துதேர் பொரு ளா யுதவுவ போலினி வந்திங், காதர வுடனே யஞ்சலென் றினியுன் னபயமீந் தென்னையா ளெனுமால். (சகூ)

சாக்கிர வவத்தை சொப்பன வவத்தை தயங்கிய சுழுத்தியி னவத்தை, போக்கிட வறியாப் பொறிபுலன் வசமாய்ப் புன் றொழில் புரிந்தலை வேனைக், காக்கவே யுனக்குக் கடனதா மிந் தக் கடுமையாப்பொருகரா விருகூ, றாக்கியே படைக்கின் றிளை கொடுத் தருளி யபயமீந் தென்னையா ளெனுமால். (ரு0)

சகலமு முனது நேமனத் துதித்த தன்மையி னுளவறி யாமல் பகலிர விளமை பிறப்புமூப் பிறப்புப் பண்டுபின் னிறைகுறை நாணஞ், சுகந்துயர் நன்மை தீமைமற் றிவற்றின் சுழற்படுஞ் சிந்தையின் மயக்கத், தகவினை நீக்கி யஞ்சலென் றினியுன் னப யமீந் தென்னையா ளெனுமால். (ருக)

தொல்லைநாட் செய்த வினையினு லெடுத்த தும்பியின் ருக்
குழல் வேளை, வல்லதாங் கரவி னுபத்திரத் தடியேன் வாதனை
பொறுத்திடப் படலேன், நல்லதா முனது பாதபங் கயத்தை
நம்பியிக் கரவினுற் படுமேன், அல்லலை யகற்றி யஞ்சலென்
றினியுன் னபயமீந் தென்னையா ளெனுமால். (௫௨)

தென்றிசை வடக்குக் கீழ்த்திசை மேற்குத் தெரிந்திட வறி
கிலே னுழ்ந்த, புன்சமு சாரக் கடலிடை வீழ்ந்து பொய்யை
மெய் யென்றிசைந் தழலும், வன்றுயர் தீர்த்து னருளெனு நா
வாய் வழங்கிலக் கரையிலே விடுவேன், அன்பருக் கெளியா
யஞ்சலென் றினியுன் னபயமீந் தென்னையா ளெனுமால். (௫௩)

பூதலத் துதித்த நாளிது வரைக்கும் பொய்வெரு வந்தகன்
னயத்தின், வாதனைக் குள்ளாய் மயங்கினே னுனது மலரடி
வணங்கிடப் பெறலேன், தீதெனுங் கருமஞ் செய்யவே துணிந்
தேன் செய்ததன் செயலென வறியேன், ஆதிநா யகனே யஞ்
சலென் றினியுன் னபயமீந் தென்னையா ளெனுமால். (௫௪)

முற்பிறப் பதனிற் செய்ததீ வினையின் மும்மல வுடலெடுத்
துலகில், உற்பவித் தினிய கதிபெற வுன்ற னுண்மையி னுளவறி
யாமல், கற்பனை நிலையே நிலைமையாய் நிகழுங் காலமும் வீணி
லே கழித்தேன், அற்புதப் பொருளே யஞ்சலென் றினியுன்
னபயமீந் தென்னையா ளெனுமால். (௫௫)

வேறு.

இவ்விதத்தினிற்புண்டரீகமுமீசனைத்தொழுதேத்தியே
எவ்விதின்றிடுமுதலைவாதனைகழியுமாதினிக்காண்கிலேன்
எவ்விதம்மினியேதுசெய்குதுமென்றேயேகமனத்ததாய்
அவ்வுமவ்வுடன்மவ்வுமாகியவாதியேயபயம்மெனும். (௫௬)

நானிலத்திடைவீறுமென்பதாலெலக்கமார்சேவனென்
அனைத்தசராசரத்திருளாவிநின்றிடுமுளவுதான்

யானுரைத்திடவல்லனேயெனையாதரிப்பவராரினித்
தினனின்னிருபாதமேகதிதேவனேயபயம்மெனும். (ருஎ)

கள்ளமாகியேயென்னைவந்துகடிந்துபற்றியகரவினைத்
தள்ளியேவிடவேறுதிக்கிலைதருமனேயினிதயைசெயாய்
எள்ளிலேயுறையெண்ணெய்போலவீரேழுலோகமிசைந்துதான்
உள்ளுமாகிப்புறம்புமாகியவொருவனேயபயம்மெனும். (ருஅ)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

யாருடைக்கண்களாகியலரியிர்துவுமிருக்கும்
யாருடைமகிமைதன்னையருமறைநூல்களோதும்
யாருடைப்பாதந்தன்னையனைவருந்தொழுவரண்டம்
யாருடைவயிற்றொடுங்குமவன்றனக்கபயமென்னும். (ருக)

எவனுடையருளினாலேபிறக்குமீரேழுலோகம்
எவனுடைவயிற்றினுள்ளேயிருக்குமிவ்வுயிர்களெல்லாம்
எவனுடைமுகத்தில்வந்தேயெண்ணெணுத்தேவராவர்
எவனுடையருளாற்காக்குமவன்றனக்கபயமென்னும். (சுo)

உண்டென்பாடியார்பங்கிலுத்தமரிடத்திலேயும்
உண்டென்பரொருமையானயோகியருளத்திலேயும்
உண்டென்பர்சாதுபக்கமுறுதிமெய்யுணாயிடத்தும்
உண்டென்பரந்தத்தெய்வமுள்ளதோயிலையோவென்னும். ()

உண்டென்பர்புவியின்வானினுட்புறந்திசைகளெட்டின்
உண்டென்பர்பகலிராவினொளிபெறுகதிரிரண்டின்
உண்டென்பரணுவின்மேருவோமெனுமெழுத்திலெங்கும்
உண்டென்பரந்தத்தெய்வமுள்ளதோவிலையோவென்னும். ()

அந்தரந்தன்னையானையண்ணாந்துபார்த்துச்சொல்லும்
எந்தனைக்காக்கத்திக்காரில்லையோயிங்கேயாரும்
எந்தநேரத்திலீசன்வந்தென்னைக்காப்பானென்று
சிந்தனைபண்ணுமெட்டுத்திசையினைத்திரும்பிப்பார்க்கும். (சுங)

இந்திரன்முனிவர்தேவரிருடிவெண்டிக்குளோரும்
சந்திரன்பரிதிமுக்கட்சங்கரனயன்மற்றோரும்
அந்தரவீதிநின்றயானையின்முறையைக்கேட்டு
எந்தனைவிதக்குத்திக்காரென்றுதாந்துயரின்றார். (சச)

இப்படிசகலருஞ்சொல்லியிறைஞ்சிமன்னவனைக்கைத்து
மைப்படிகண்டன்வேதன்வாசவன்மற்றுளோரும்
எப்படிபார்க்கலுற்றாரிடர்தொலைத்திபத்தைக்காக்கச்
செப்பமில்லாமலின்றசேதியையுணர்மினென்றான். (சரு)

தங்கமாமுனிவன்கேட்டுச்சுடர்முடியரசைநோக்கிச்
சங்கையில்லாமலத்திதற்பரன்றனையோட
எங்கனினைந்ததில்லையென்றயன்சிவன்மற்றோரும்
அங்கனேபார்த்திருந்தாரென்றுபின்னுரையலுற்றான். (சசு)

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

அகிலகா ரணனா யனாதராட் சகனா யடியர்கட் கெளியனாய் நிறைந்த, சகலசீ வியட்கும் பரனுமா யுலகத் தாயுமா யமலதற் பரனாய்ப், பகவனாய்ச் சென்ம நாமமி லவனாய்ப் பரத்வமா யனேக னா யலர்வித், தகனுமாய்ச் சர்வ சரண்யனா யுறைவோ னவன்றனைக் கபயமின் றெனுமால். (சஎ)

சித்தனாய் முனிக ளாற்றொழுங் கடவு ளாய்சிரா மயனுமா யெவர்க்குஞ், சுத்தனாய்ப் பரம புருஷனாய்க் கருணா கரனுமாய்க் கதியரு டேவாய்ச், சுத்தனாய் விமல னாய்வியா பகனாய்ச் சரு திபா ராயண னாயும், அத்தனா புலோக நியாமக னானே னவன்றனைக் கபயமின் றெனுமால். (சஅ)

பராபரப் பிரம மாய்ப்பரஞ் சுடராய்ப் பராட்டுசீர்க் குணை ன்றயா நிதியாய், விராட்டுபூ ரணனாய் காதரின் மலனாய் விப வமா யறுகுணத் தவனாய்ச், சுராட்டுதற் பரனாய்ப் பிறப்பிறப் பிலியாய்ச் சிற்பர னெண்குணத் தவனாய்ச், சராசரங் கட்கு மீசனாய் விளங்குஞ் சச்சிதா னந்தனுக் கபயம். (சக)

அடியர்கள் கருணை லயனுமாய்ச் சுயம்பா யனைத்தினு முயனு
நற் றேவாய்ப், படிமடி வேலைப் பரப்புமா யாலாய்ப் பாலனு
யருள்கொடை யவனுய்க், குடினடு கூவை யேந்திமுக் குண
னுய்க் குவலயத் தொளிருரு வானேன், படிறுள கரவின் வா
யினின் றென்னைப் பரிவுட னருள்வனின் றெனுமால். (எ0)

இடிமிகர் கரவாற் கால்கர மோய்ந்து வேக்கமா யுயிர்தடு மா
றிப், படிவமு முருகி வாலசை வற்றுப் பரிவுட னரற்றுபே ரொ
லியால், இடியன லப்பாய்க் கால்வெளி பூவா யெண்ணுமும்
மூர்த்தியின் முதலாய், அடிகளா மாதி மூலமே யெனுமம்
முறையரி செவிநுழை போழ்தே. (எக)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பங்கயத்திருவைப்பாரான்பணிமுடிகிழலேத்தேடான்
சங்குசக்கரமுமேந்தான்தன்னெதிர்தொழுதுநிற்கும்
இங்கிதக்கருடன்மீதிலேறிடானிபத்தைக்காக்கக்
கங்கையைப்பெற்றபாதசாரியாய்க்கடுகிவந்தான். (எஉ)

அன்னகரிருந்தபேர்களதிசயமனத்தராகி
என்னகாரணமீதென்றேயேகமாய்க்கூடிநின்று
பன்னகாபரணன்றன்னைப்பரீக்கைகாண்டிடவரக்கர்
துன்னினரோவென்றெண்ணித்துயக்குடன்சொல்லலுற்றார். ()

யோகியர்தமக்குவுத்தருபத்திரஞ்செய்தவாறே
கோகனன்மனதுநோகக்கொடியர்கள்புடைத்தவாறே
யாகமேபுரியுநாளிலரக்கர்வந்தழித்தவாறே
தோகையர்துகிலைப்பற்றித்துர்ச்சனர்களைந்தவாறே. (எச)

துர்ச்சனர்கூடிநின்றுதொடர்ந்தடியானைப்பற்றிப்
பச்சைமேனியனுமுங்கள்பரமனெங்கேகாட்டென்று
மச்சரம்வைத்துமெத்தவாதைசெய்தாரோவென்றங்
கச்சுதனடைந்தபோதிலனைவருமாலோசித்தார். (எரு)

நாதனைப்பிரியாலட்சுமிநாயகியுடுத்தசேலை
பாதிமுன்றானையந்தப்பாமரனார்பற்றியேகும்
போததாருமிந்தப்புதுமையையறிதுமென்று
மாதவன்பின்றொடர்ந்துமயிலெனச்செல்லலுற்றாள். (௭௬)

முடியவிழ்கேசஞ்சோரமுகந்துறுவேர்வைசோர
அடியிணைகுழையமெய்யிலணிமணியாரமாடக்
கொடியிடைதுவளநீலக்கொண்டலின்மின்னல்போல
நெடியவன்பின்னெருங்கிநேரிழைநடக்கலுற்றாள். (௭௭)

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வாமதேவனுங்கௌரியும்விடைவாகனம்மிசையேறியே
காமகளுடன்கூடவேமறைநான்முகனன்னமேறியே
வாமனுமிந்திராணிவெண்மதகரியின்மீதினிலேறியே
சோமனுந்தினகரனுந்தேரின்மேற்றுணைமாருடனேறியே. ()

விண்டலத்தினிலுள்ளபேர்களும்வீறுமெண்டிசையோர்களும்
மண்டலத்தினிலுள்ளபேர்களுமாதவம்புரிவோருமார்க்
கண்டருங்கௌதமரகத்தியர்கௌசிகர்முதலானபேர்
கொண்டன்மேனியனுருகுமென்றுகுதிப்பதிந்தவர்கூறுவார். ()

அந்தரத்தோரியருகினிற்றிருவமரராஜனுந்தொடர்ந்திட
சங்குவீறிடத்தொனியதோபலகாயிருந்திகிரியுமதோ
அந்தமாகியகருடனுமதோவனந்தனுமதோசித்தியவை
குந்தமேவியபெயர்களுமதோவென்றுநின்றுகைகூப்புவார். ()

மாயனேசரணென்பர்வாழ்திருமார்பனேசரணென்பரால்
ஆயனேசரணென்பரச்சுதவமலனேசரணென்பரால்
கேயனேசரணென்பர்நான்மறைநிருபனேசரணென்பரால்
தூயனேசரணென்பர்சென்னியிற்சேர்த்திரண்டுகைகூப்புவார்.

வந்ததேவருங்கூடிநின்றுபல்லாண்டிசைத்துவந்தனஞ்செய
நந்தனுமதுகொண்டிடாமலோகமேன்மனநாடியே

சிந்தையாயதிவேகமாகவேசெல்லும்போதவர்தம்முடன்
பிந்திமுந்தியுமேகலுற்றனர்தேவர்மாமுனிப்பிரளயம். (அ௨)

செங்கண்மாலுநடந்துவேகமாய்ச்செல்லவேசெழுந்தூரமாம்
பங்கயப்புனல்மேவுதும்பியின்பயமகன்றிடவானுறை
செங்கதிர்த்திரள்கோடிபோலவேதேசுகொண்டவத்திகிரியை
மங்கைநாயகனேவியேமுந்திவந்துநின்றனன்கனாயின்வாய். ()

மண்டலம்மிருபிளவதாகவுமாதிரங்களும்வெடிபட
விண்டலங்கள்பிளந்ததாகவுமேருவும்மிகவுருகவே
குண்டலஞ்சிரசுந்துளங்கிடக்கும்பியைப்பொருகரவிரு
துண்டமாகவேசெய்துமீண்டரிகையிலாழியுநின்றதே. (அ௪)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

கரவுதானென்றுவானிற்கதிரவன்கதியிற்செல்லும்
கரவுதானின்றிருந்தநிலைதனைக்கரந்துபோய
திரமெனக்கமலந்தன்னிற்றிரிந்திடுங்கரவுமெல்லாம்
பரமெனக்கென்றுமாயன்பக்கலிற்சேர்ந்தவாறே. (அரு)

சிதரன்சங்கந்தன்னைத்தொனித்தனன்செவிடுபட்டு
வேதனிந்திரனீசானன்விண்ணவர்மெய்ம்மறந்து
சிதளசலதிமேருசுழன்றுடன்றெளிவுகொண்டு
மாதவன்மீதிலன்றுசொரிந்தனர்மலரின்மாரி. (அ௬)

அந்தரத்திடையின்பேரியதிரவேமுழங்குந்தேவ
துந்துமிசின்னங்காளஞ்சொல்வகைப்பல்லியங்கள்
திந்திமிதிமிதியென்னத்தேவர்கள்செயசெயென்ன
வந்தனன்செங்கன்மாலும்வாரணத்தருகினன்று. (அஎ)

நீரிடைநெடிதுநாளாய்நிலையற்றுநின்றயானை
பாரியகரவுமாளக்கண்டுதன்பயமகன்று
காரியமுடிக்கவிங்குக்காரணமாகவந்த
சீரியதிருமாறன்னைநோக்கியேசிரசையாட்டும். (அஅ)

ஆடியசிரசின்மீதிலரிமலர்க்கையைவைத்து
வாடினதுயரமெய்தியனமொருமித்துநம்மை
நாடினையினியோர்நாளுநாசமேவாராதென்று
நீடியவுடலைக்கையாற்றடவினனெடியமாலும். (௯)

தடவியவரியின்கையைத்தூக்கியுந்தன்கைநீட்டி
அடைவுடன்மோந்துகொண்டங்களவிலாப்புளகமாகிக்
கடவுளின்கருணையாலோங்காரமேசெய்துநின்ற
உடனேமுன்றனிலுள்ளவுருவினைக்கொண்டதாங்கே. (௧0)

சுரர்பதியரனயற்குத்துதிக்கவும்வணங்கவெட்டா
வரிதினைவலமாய்வந்தேயஞ்சலித்தெதிரினின்று
திருமகளுறையுமார்புந்தேசுளாமுகமுநோக்கிப்
பரிபவகுணங்களெல்லாம்பத்தியாய்த்துதிக்கலுற்றான். (௧௧)

சிறியவன்றனக்குப்பொன்னின்சீர்முடியளித்தமாலே
உறுதியாய்ப்பிரகலாதற்குதவியசிங்கரூப
மதிகரரேறுதமூலமந்திரப்பொருளேயாதி
திரிபுரதகனஞ்செய்யுஞ்சேவகபோற்றிபோற்றி. (௧௨)

கல்லுருமாதிநின்றன்கழற்றுகள்கதுவாமுன்னம்
கல்லுருப்பெற்றதென்னோதனைமடவிலுற்ற
வல்லுருவிடங்கர்வாயின்மடங்கவேவமைத்தவென்றன்
தொல்லுருதொலைக்குமாறுதோன்றினையென்முனின்றே. (௧௩)

பண்டோன்செய்தபாவம்பகடெனப்பெயரைத்தாங்கிக்
கண்டமாவிலங்குக்கெல்லாங்காலனென்றுரைப்பதாகக்
கண்டகத்துறையுமீர்தக்கண்டகன்றன்மேலன்பும்
உண்டெனுமொழிவிளக்கவுந்துநீவந்ததன்றே. (௧௪)

ஒன்றுமூன்றாகியோதியுறுபொருட்கப்பால்வேறுன்
டென்றுணாக்கிருநீயையாவென்றுதற்கருமையாகித்
துன்றுமெண்கிரணமுநீயெனமறைசொன்றுன்மற்றோர்
குன்றுவதல்லால்வேறுகுணமுண்டோகூறுதற்கே. (௧௫)

மயலெனும்பிறப்பைநீக்கிமாசிலாவுருவமல்கித்
தியக்கமாந்துயரிலாநற்றின்களாயதனினேற்றி
வியந்தரமன்னபேதைவெய்துறலறுத்ததெம்மா
னயக்கணையனையேயென்முனற்றவமுயன்றதென்றான். (௯௬)

தன்பெருஞ்சலதிபூத்ததகையுறுமொக்குளேடோல்
திண்ணுற்றவண்டநின்னுட்டோன்றியேகரக்கும்பக்கம்
கண்கொடுவாயாற்சொல்லவொக்குமோகருணைவாரி
எண்ணுறுமறைக்குமெட்டாவெழிலுடையமரரேறே. (௯௭)

ஈசனேதேவர்க்கெல்லாமிறைவனேதிகழ்வைகுந்த
வாசனேயடியார்க்கென்றும்வரதனேயனந்தவெய்யோன்
தேசுளவடிவேயுன்னைச்சிந்தையிற்றரிசிப்போர்க்கு
மாசிலாப்பதவிநல்குமாயனேசரணமென்றே. (௯௮)

இறைஞ்சியேநின்றவிந்திரத்தூய்மன்றனையேநோக்கித்
துறந்தனைதீமையெல்லாஞ்சுகமினிபெறுவாயென்று
அறந்திருநாதன்சொல்லவரசனுமரிருபான
நிறந்தனையெய்திமோக்ஷநிலையதுபெற்றவாறே. (௯௯)

கரவெனுமுருவமாறிக்கந்தர்வவடிவமாகிப்
பரமனைவணங்கியேத்தியலர்மகள்பாதஞ்சேர்ந்து
திரமெனுங்கீதம்பாடித்தேவர்கள்வாழுகின்ற
புரநிலையாகப்பெற்றுப்போயினனூகூவென்பான். (௧00)

இந்நற்கதையைக்கேட்டுவெழிற்பரிச்சித்திராசன்
அந்தமாருஷிபதத்தையஞ்சலிசெய்துநோக்கி
இந்திரத்தூய்மனூகூவெனுமிருவர்க்குநேராய்
நந்தல்வந்துற்றவாறுநம்பிநீயருடியென்றான். (௧0௧)

சிந்துபூதலத்தையாண்டசெழுமுடியரசர்தம்மில்
கந்தலிலறத்தின்கண்ணேகாதலனாகின்ற

இந்திரத்துய்மனென்றுமெழிற்பெயருடையானுண்டு
சந்திவழிவந்தற்றேன்சதுரங்கபலமுமுள்ளோன் (௧0௨)

அன்னவன்றவஞ்செய்போதுவகத்தியன்வருதல்கண்டு
சென்னியைக்குனியானாகச்சீறியேசாபமிட்டான்
மன்னனையதிந்ததிருமயேச்சுரன்றன்பாலன்பு
தன்னனீயளிக்கவென்னவளித்தனன்தம்பியானான். (௧0௩)

கானகத்திருந்தபன்றன்கரியனாய்க்கழித்துவேந்தன்
ஞானநாயகன்பதத்தைகண்ணினனென்றுசொல்வான்
மோனமாயிருடிநீரின்மூழ்கிடத்தானைப்பற்றி
ஈனமாமுதலையைப்போலிழுத்தனனாகவென்பான். (௧0௪)

மந்திரவிருடிதானுமனதினிற்றியானஞ்செய்து
இந்தமாமுதலையாகியிருவெனச்சபித்துப்போனான்
தந்தியின்றனைக்கவ்வச்சக்கரத்திருகூறாக்கக்
கந்தருவடிவமாகிக்கதிதனையடைந்தவாறே. (௧0௫)

இத்தலந்தன்னிலுள்ளோர்யாவராகிலுமென்னில்கண்டு
பத்தராயிருந்தோர்க்கென்றும்பயமிலைதுன்பமில்லை
குற்றமுங்குறையுமில்லைகுலவழித்தாழ்வுமில்லை
பற்றிடுவினையுமில்லைபகையிலைபரிச்சித்தேகேள். (௧0௬)

சத்தியவசனமாகச்சாற்றுவேனுலகின்மீது
அத்தியினுயிரைக்காத்தோனம்புயமலர்நற்றாளைப்
பத்தியாற்றொழுதபேர்க்குப்பழவினைநீக்கிஞான
முத்தியேபிறவிநீக்குமோக்ஷமுஞ்சித்தியாகும். (௧0௭)

பெற்றிடுந்தந்தைதாய்சேய்பெண்டிருஞ்சுற்றத்தாரில்
சுற்றியபொருளைக்கம்பினலமிலையரியின்மீது
பற்றியசிலையினிற்கப்பலிக்குநற்கருமமெல்லாம்
உற்றிடுமுத்தியென்றேயுணர்த்தனர்சுகருமன்றே. (௧0௮)

மொழிந்திடுஞ்சுகனாநோக்கிமொய்ங்கைவதனத்தோடும்
எழுந்துநின்றிறைஞ்சியந்தவிராஜனும்புளகமாகி
அழுந்துமஞ்ஞானம்விட்டேயரிகதைகேட்கஞானக்
கொழுந்தெழும்விளக்காயன்புகொண்டுகைகூப்பிநின்றான். ()

புடவியிற்றருமநீதிபுரந்திடும்பரிச்சித்தேகேள்
படவரவணையின்மேவும்பரமனார்பக்கநின்ற
விடகளன்மேகவாகன்வேதனைவிரும்பிடாமல்
கடறருமாதைநோக்கிக்காதலோடுரைக்கலுற்றார். (கக0)

மறந்திடாதெனதுநெஞ்சமலரின்மாமகளேயுன்னை
மறந்திடுமடியாரென்னைமனதுநொந்தழைக்கும்போது
மறந்திடுஞ்சகலலோகவன்மையுமற்றுளோனா
மறந்துசாதுவையேகாக்கவருவனென்றுரைக்கலுற்றார். (ககக)

செந்திருமடந்தைதானுஞ்செப்புவாளரியைநோக்கி
எந்தநேரமுமுன்பாதமிதயத்தினிலையாக்கொண்ட
என்றனுக்கினிவேறேதுயிறைவனேயுன்றன்பின்னே
வந்தனனென்றுபின்னுமனமகிழ்ந்துரைக்கலுற்றாள். (ககஉ)

தீனர்கணினைத்தபோதுசெல்வமீந்தருளவேண்டும்
தீனனாப்பொருந்திநின்றதீவினையகற்றவேண்டும்
தீனருக்குறுதியானசெல்வமுமளிக்கவேண்டும்
தீனரக்ஷகனென்றியாருஞ்செப்பிடுந்தேவதேவே. (ககங)

என்றிடுங்கமலமாதோடெழிலுடைக்கொண்டல்வண்ணன்
நின்றிடுமூர்த்தியானகருடன்மீதேறிநேரில்
துன்றிடுமுனிவர்வேதன்சுரர்பதியிடபமூர்த்தி
அன்றவர்யாருங்கேட்கவடைவுடனுரைக்கலுற்றான். (ககச)

அனைவருங்கேளுமித்தவாகமவிதிப்படிக்குத்
தினகரனுதியாமுன்னந்தெளிந்துநித்தினாயினின்று

மனதினிற்கள்ளமின்றிவாரணமோக்ஷந்தன்னை
அநுதினந்துதிசெயன்பர்க்கருள்வனம்வீட்டையென்றே. ()

சங்கந்தைத்தொனித்துத்தேவதேவருஞ்சார்ங்கபாணி
இங்கிதமாகச்சென்றுவிணையில்வைகுந்தத்திற்குச்
சங்கரனயன்மற்றோருமவரவர்தானஞ்சேர்ந்தார்
பொங்கமாய்ச்சுகரிதெல்லாம்புகன்றனர்பரிச்சித்துக்கே. ()

தேவர்கள்வாழியெட்டுத்திசையிலுள்ளோர்கள்வாழி
மூவரும்வாழியாதிமூலமும்வாழியிந்தப்
பூவுலகெங்கும்வாழிபொதுவர்தங்குலமும்வாழி
யாவரும்வாழிவாழியறமதுசயமாய்வாழி. (ககஎ)

சுகர்பரிச்சித்துக்கன்பாய்ச்சொல்கசேந்திரமோட்சத்தைச்
சகதலமிசையேவீதிச்சாற்றுவாருரோவென்னில்
நகரதன்றனிவளர்த்தநற்குலவேங்கடப்பன்
மகவெனவீறுங்கச்சிவாழ்திருவடியான்றனே. (ககஅ)

கஜேந்திர மோக்ஷம்

முற்றிற்று.

---

